உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்



# பிள்ளையார்பட்டி கற்பக விநாயகரகவல்





ஆசிரியர்:

'சைவசித்தாந்த சரபம்'

சிவஸ்ரீ

தத்புருஷ தேசிகரவர்கள்

உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

# பிள்ளையார்பட்டி
# கற்பக விநாயகரகவல்



ஆசிரியர்:

## 'சைவசித்தாந்த சரபம்'
## சிவஸ்ரீ
## தத்புருஷ தேசிகரவர்கள்

உ
சிவமயம்
ஸ்ரீ மீனாட்சி சொக்கலிங்கம் துணை

## பதிப்புரை

முதற் பெருங் கடவுளாகிய அம்மையப்பர் திருவருளால் எங்கள் புதல்வன் செல்வன் **சித்சபேசனுக்கும்** சுப. செந்தில்நாதன் செட்டியார் மகள் செல்வி **சீதாலெட்சுமிக்கும்** இன்று நடைபெறும் திருமண நினைவாக ஒரு நூலை வெளியிட வேண்டுமென்று விரும்பிக் கேட்டுக் கொண்டதற்கிணங்க, பிள்ளையார்பட்டி கற்பக விநாயகரகவல் என்னும் இந்தநூலை எங்கள் ஞானத் தந்தையார் சிவஸ்ரீ தத்புருஷ தேசிகர் அவர்கள் இயற்றித் தந்தார்கள்.

இதனை அன்பர்கள் பாராயணத்தில் வைத்துக் கொண்டு பயன்பெற விரும்புகிறோம்.

தேவகோட்டை
28—8—1991

அன்புள்ள,
*மீனாட்சி அழகப்பன்*
**AL.** *அழகப்பன்* B.Sc., M.B.A.,

உ

சிவமயம்

பாலருவாயர் துணை

# பிள்ளையார்பட்டி கற்பக விநாயகரகவல்

தேவகோட்டை

'சைவ சித்தாந்த சரபம்'

சிவஸ்ரீ தத்புருஷ தேசிகரவர்கள்

இயற்றியது.

அண்டபே ரண்டம் அனைத்தையும் படைத்துச்
சீவான் மாக்களின் செல்கதி வகுத்த
சிவபரம் பொருளும் சிவத்தொடு பிரிப்பற
நெருப்பிற் சூடுபோல் நிற்கும் சத்தியும்
களிறு பிடியெனக் கலந்திருந் தளித்த
பிரணவப் பொருளாம் பெருந்தகை நமது
இடையூ றகற்றி இன்பம் வழங்கப்
பாலர் தருணர் பக்தி வீரர்
சக்தி துவிசர் சித்தி உச்சிட்டர்
விக்னர் க்ஷிப்ரர் விளங்கும் ஏரம்பர்
இலக்குமி மகான் இனிய விசயர்
நிருத்தர் ஊர்த்துவர் நீடுமே காட்சரர்
வரர்திர யர்க்ஷர் மகிழும் க்ஷிப்ரப்

பிரசாதர் ஹரித்திரர் பிடுசால் ஏக
தந்தர் சிருட்டி தக்கஉத் தண்டர்
ரணமோ சனர்துண்டி குணமாந் துவிமுகர்
திரிமுகர் சிங்கர் திகழும் யோகர்
துர்கர்சங் கடஹரர் என்று சொலப்பெறும்
நாலெட் டுருக்கொடு நானிலத் தமர்ந்தவன்
களிற்று முகத்துக் கடவுள் கவின்பெறும்
ஒன்று முதலா உரைக்கும் ஐந்தளவில்
திருமுகம் கொண்ட சீர்த்தி மிக்கவன்
நான்கும் எட்டும் நயமுள பத்தும்
பதினா றும்மெனப் பகர்கரம் உடையவன்
அருணம் செம்மை அழகிய வெண்மை
மஞ்சள் மதிநிறம் வயங்கும் பசுமை
நீலம் பொன்மை நிலவுசெவ் வரத்தை
கதிர்நிறம் பளிங்கு காண்திரு மேனியன்
மூடிகம் சிங்கம் முகிழ்பொற் றாமரை
கற்பக மரத்தில் காட்சி தருபவன்
சித்தி புத்தி சீர்பெறும் வல்லபைச்
சத்திகள் மகிழத் தழுவி யிருப்பவன்
பலாமா வாழைப் பழங்களும் நாவல்
விளாம்பழ மாதுளை விரும்பு கனிகள்
பாசம் அங்குசம் பணியார மோதகம்
கரும்பொடு கொம்பு காணும் நெற்கதிர்
தேங்காய் பாயசம் திகழும் பாத்திரம்
வேல்வில் அம்பு வேதாளம் சக்கரம்

| | | | |
|---|---|---|---|
| கத்தி | கேடகம் | கதைசம் | மட்டி |
| நாகம் | சூலம் | நயமுறும் | கொடிமழு |
| புத்தகம் | தண்டம் | பூமாலை | அக்க |
| மாலைகுந் | தாலி | வரதம் | அபயம் |
| கமண்டலம் | பரசு | காஸ்நி | லோத்பலம் |
| வீணைபூங் | கொத்து | விளம்புமென் | ஞருண்டை |
| சங்கு | கரும்புவில் | தக்கபூப் | பாணம் |
| கோடரி | கற்பகக் | கொடிகிளி | கும்பம் |
| கட்கம் | தாமரை | காண்யோக | தண்டம் |
| சிங்கம் | தாங்கும் | செல்வ | வாரணம் |
| நந்தி | மகனாம் | ஞானக் | கொழுந்தவன் |
| மரகத | முனிவற்கு | மாயையில் | வல்ல |
| அசுர | மங்கை | ஆகிய | விபூதி |
| வயிற்றிற் | பிறந்த | மாமுக | அசுரன் |
| சுக்கிரா | சாரியன் | சொற்படி | பெருந்தவம் |
| செய்தா | யுதங்களால் | சிதைவு | பெறாவரம் |
| பெற்ற | செருக்கால் | பெரியவர்க் | கெல்லாம் |
| துன்பம் | விளைக்கத் | துடுக்குடன் | மிடுக்குடன் |
| கயமுகன் | அரசுசெய் | கடிநகர் | ஆகிய |
| மதங்க | புரத்தை | வளைத்துச் | செய்த |
| போரிலவ் | வசுரனைப் | பொலிவுறுந் | தனது |
| கொம்பிலொன்றொடித்துக் | | கொல்ல | அவனொரு |
| பெருச்சாளி | யுருக்கொடு | பீடுசேர் | வாகனம் |
| ஆயினன் | அந்த | அசுரனைக் | கொன்ற |
| பழிநீங் | கிடவெனப் | பாண்டிநன் | னாட்டுப் |

பிள்ளையார்பட்டிப் பெருந்தலம் வந்து
வடக்கு நோக்கி மன்னிவீற் றிருந்து
பூர்வம் நோக்கிப் பொலிந்திருந் தருளும்
சிவகாமி யம்மை சேர்திரு வீசரை
வேத சிவாகம விதிப்படி முறையே
ஈறெண் திறத்துப சாரமும் இலங்கப்
பூசித் தனனிப் புனிதப் பெருந்தளி
நாட்டுக் கோட்டை நகரத் தார்களில்
திருவேட் பூருடைச் செல்வர்கள் செய்த
புண்ணிய வசத்தால் புரந்திட அமைந்ததால்
தொன்மையும்நன்மையும் துலங்குமிக் கோயிலில்
வாடா மலர்த்தாய் மருதீச ரோடு
பேரருள் செய்வர் பாரினில் அருமையும்
பெருமையும்மிக்க பிள்ளையார் பட்டியில்
வழிபடு வோருளம் மகிழ வரமருள்
நாயகன் ஆகி நன்மை திகழும்
கற்பக விநாயகர் கழலிணை சரணே

நலமே தழைக.



செல்வன்: AL. சித்சபேசன்

செல்வி: சீதாலெட்சுமி

# திருமண நினைவு வெளியீடு

"ஸ்ரீகற்பகம்"

16, கருதாவூருணிக் குளக்கால் தெரு,

தேவகோட்டை - 623 302.

கலைமணி பிரஸ், தேவகோட்டை.